REGD No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு



**தமிழன்**

தமிழன் வாழவேண்டிய நல்வாழ்வு தன்னை மட்டும் வாழ்வித்துக் கொள்ளக்கூடியதல்ல; தமிழன் நல்வாழ்வு, வாழவேண்டுமென் பதுமற்றவர்களைவாழ வைக்க வேண்டும் என் பதுதான்.

— பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்



**வாக்குறுதி**

எனக்குத் தெரிந்த வரை என்னுடைய குடும்ப வாழ்க்கையிலும் சரி, சமூக வாழ்க்கையிலும் சரி, ஒரு தடவையாவது வாக்குறுதி கொடுத்த பின் அதை மீறியதே இல்லை.

— அண்ணல் காந்தி

● மலர்: 3 சென்னை 23—8—1979 வியாழன் (★) ❋ ● ❋ (★) வெளியீடு 24-8-1979 வெள்ளி (●) இதழ்: 305 ●

## தொலைக்காட்சி நிகழ்ச்சியில் அமைச்சர் குழந்தைவேலு

சென்னை, ஆக. 23- சென்னை தொலைக்காட்சியில் 24-8-79 அன்று இரவு 9.15 மணி முதல் 9.45 மணி வரை ஒளிபரப்பப்படும் "நேருக்கு நேர்" நிகழ்ச்சியில் அமைச்சர் குழந்தைவேலு கலந்து கொண்டு வேளாண்மை விளைபொருள் விற்பனைத் துறையில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்களை விளக்குகின்ருர்.

இந்நிகழ்ச்சியில் பேராசிரியர் டாக்டர் சுவாமிநாதன், பேராசிரியர் மகாதேவன், ராமச்சந்திரன், மாலினிசேஷாத்திரி ஆகியோரும் பங்கேற்கின்றனர்.

**பண்ருட்டி கட்டுரை நாளை**

எத்தர்கள் ஆட்சியில் எளியோர் இல்லம் இருண்டு கிடந்த காலம் மலையேறிவிட்டது ★ மீட்டர் இல்லாமல் ஏழைகட்கு மின்சாரம்

# குடிசைகளுக்கு மின்சார விளக்கு

## புரட்சித்தலைவர்திட்டம்நிறைவேற்றம் — விளக்கேற்றி வைத்தார் அமைச்சர் பண்ருட்டி

**சென்னை, ஆக. 23- பிரகாசமான வெளிச்சத்தையே பார்த்திராத குடிசைகளில் மின் விளக்குகளை ஏற்றிவைப்பதன் மூலம் ஏழை-எளிய மக்கள் வாழ்வில் மிகப்பெரிய புரட்சியை அரசு ஏற்படுத்தியுள்ளது.**

**ஏழைகளின் வீட்டுப் பிள்ளைகள் படித்து முன்னேற வேண்டும் என்பதற்காக புரட்சித்தலைவர் இந்த திட்டத்தை செயல்படுத்துகிருர் என்று அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினுர்.**



செங்கற்பட்டு மாவட்டம் மகாபலிபுரம் அருகே உள்ள வடகடம்பாடி, சோகண்டி ஆகிய கிராமங்களில் குடிசைகளுக்கு மின்சார இணைப்பு வழங்கும் விழா நேற்று (புதன்) நடைபெற்றது.

குடிசைகளுக்கு மீட்டர் இல்லாமல் மின்சாரம் வழங்கும் திட்டத்தைத் தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் வரவு-செலவு திட்டத்தின்போது அறிவித்திருந்தார்.

அதன்படி சோகண்டி கிராமத்தில், 141 குடிசைகளுக்கும், வடகடம்பாடி கிராமத்தில் நூற்றுக்கும் மேற்பட்டகுடிசைகளுக்கும் மின்சார இணைப்பு வழங்கும் விழா இந்தியன் ஓவர்சீஸ் வங்கியின் சார்பில் நடைபெற்றது. இந்த இரு கிராமங்களையும் இந்தியன் ஓவர்சீஸ் வங்கி தத்து எடுத்திருக்கிறது.

விழாவுக்கு வந்திருந்தவர்களை இந்தியன் ஓவர்சீஸ் வங்கியின் துணைப் பொது மேலாளர் ஏ. நமச்சிவாயம் வரவேற்றுப் பேசினுர். விழாவில் எல். லட்சுமணன், எஸ். என். ராஜமாணிக்கம், எஸ். ஆர். கிருஷ்ணமூர்த்தி, ஏ. டி. ரங்கமணி, டி.ஜெயராமன் ஆகியோர் பேசினுர்கள்.

குடிசைகளுக்கு மின் விளக்குகளை இயக்கி வைத்து தமிழக மின் துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பேசியதாவது:

வடகடம்பாடிகிராமத்தில் ஒரு குடும்ப வருமானம் 75 ரூபாயாக இருந்தது. இந்தியன் ஓவர்சீஸ் வங்கி தத்து எடுத்த பின் இப்பொழுது 200 ரூபாயாக உயர்ந்திருக்கிறது. இதை 400 ரூபாயாக உயர்த்துவது என்பது திட்டம்.

குடும்ப வருமானம் 250 ரூபாய்க்கு அதிகமாகி விட்டாலே வறுமைக் கோட்டில் இருந்து விடுபடுகிறது என்று பொருள். வங்கிகள்தேசிய மயமாக்கப் பட்டதால் தான் இப்படிப்பட்ட வங்கிகள் கிராமத்திலிருந்து பணியாற்றுகின்றன.

வங்கியைப்போல் அரசாங்கமும் கிராமத்தை நோக்கி வந்திருக்கிறது. ஒருவீட்டிற்கு மின்சார இணைப்பு பெறவேண்டும் என்ருல் 280-300 ரூபாய் ஆகும். ஆனுல் 10 ரூபாய் டெபாசிட்டில் இப்பொழுது குடிசைகளுக்கு மின்இணைப்பு கொடுக்கப் பட்டிருக்கிறது. ஒவ்வொரு குடிசைக்கும் மின்சார இணைப்பு தர மின்சாரவாரியத்திற்கு 150 ரூபாய் செலவாகிறது.

குடிசைவாசிகள் மின்சாரக் கட்டணமாகமாதம் இரண்டரைரூபாய்செலுத்தினுல் போதும். மண்ணெண்ணை கொண்டு விளக்கு எரிக்க மாதத்திற்கு 6 ரூபாய் செலவாகும். ஆனுல் அரசின் திட்டத்தினுல் இரண்டரை ரூபாய் செலுத்தினுல் போதும்.

மீட்டர் இல்லாமலேயே மின்சார இணைப்பு கொடுக்கப்படுகிறதே என்று நீங்கள்பாட்டுக்கு விளக்கை எரிக்காதீர்கள். சிக்கனமாக பயன்படுத்துவீர்கள் என்ற அந்த நம்பிக்கை எங்களுக்கும் இருக்கிறது. புரட்சித்தலைவருக்கும் உண்டு.

இந்த திட்டத்தினுல் மின்சார வாரியத்திற்கு எவ்வளவு செலவு என்பதைப் பற்றி கவலை இல்லை. எத்தகையோருக்கு பயன்படுகின்றது என்பதுதான் முக்கியம். குடிசைகளில் இருப்பவர்கள் ஏழைகள் தான். ஆனுல் அவர்களது பிள்ளைகளாவது படித்து முன்னேறட்டுமே என்று தான் இந்த திட்டத்தை அமல்படுத்துவதற்கு தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் முன்வந்திருக்கிருர்.

இந்த திட்டம் தமிழக மக்களிடத்தில் மிகப்பெரிய புரட்சியை ஏற்படுத்தும் என்று நம்புகிறேன். ஏழை மக்களின் வாழ்க்கைத்தரம் உயர வேண்டும். அப்பொழுது தான் மக்கள் உள்ளத்தில் மகிழ்ச்சி ஏற்படும்.

மக்களின் வாழ்க்கைத் தரம் உயர மின்சாரம் பயன்படுகிறது. அதனுல் தான் குடிசைகளுக்கு மின்சார இணைப்பு வழங்கும் திட்டத்தை தமிழக அரசு செயல்படுத்துகிறது.

இதுபோல் அரசாங்கம் தூண்டுகோலாக இருக்க முடியுமே தவிர- வாழ்க்கை முழுவதும் துணையாக வர முடியாது. இது எந்த அரசாலும் முடியாது. மரத்தில் ஏறக்கற்றுக்கொள்கிறவனுக்கு நம்மை எட்டுகிற வரைதான் அவனைத் தூக்கிவிட முடியும், அதற்குமேல் எப்படி தூக்கிவிட முடியும்? அதற்கு அவனே மரத்தில் ஏறிவிடுவானே?

அந்த வகையில்தான் தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகளும், அரசாங்கமும் ஏழைகள் வாழ்க்கையில் உயர உதவி செய்கின்றன.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பேசினுர்.

## டெல்லியில் இ. காங்கிரஸ் மாநாடு

புதுடெல்லி, ஆக. 23- அகில இந்திய இந்திரா காங்கிரஸ் மாநாடுசேலத்தில் செப்டம்பர் 13, 14ஆகிய தேதிகளில் நடைபெறும் என்று அறிவிக்கப்பட்டிருந்தது. தற்போதைய புதிய அரசியல் சூழ்நிலை காரணமாக இம் மாநாடு சேலத்துக்கு பதிலாக டெல்லியிலேயே நடைபெறும்.

செப்டம்பர் 12ந்தேதி மட்டும் ஒருநாள் நடைபெறும்.

திருவாரூரில் பெரியார் விழா:

## மொழிகாக்க உயிர் நீத்த வீரர்கள் பெயரில் வரவேற்பு வளைவுகள்

### அமைச்சர் எஸ்.டி.எஸ். தகவல்

சென்னை; ஆக. 23-தமிழ் மொழி காக்க உயிர்நீத்த தியாகத் தங்கங்கள் பெயரில் திருவாரூர் பெரியார் விழாவை யொட்டி வரவேற்பு வளைவுகள் அமைக்கப்படுகிறது என்று அமைச்சர் எஸ். டி.எஸ். கூறினுர்.



அமைச்சர் எஸ்.டி.எஸ். வெளியிட்டுள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

தஞ்சை மாவட்டம் திருவாரூரில் தந்தை பெரியார் நூற்ருண்டு விழா கொண்டாடப் படுவதை யொட்டி திருவாரூரில் திராவிட வரலாற்றை ஆரம்பம் முதல் இன்று வரையிலும் விளக்குகின்ற வரவேற்பு வளைவுகள் போடப்படுகின்றன.

திராவிட இயக்கத்திற்காக இன்று வரை ஈந்த பெரியோர்களுடைய பெயரால் வளைவுகள் போடப் படுகின்றன. திராவிட இயக்கத்தை சுட்டிக்காட்டிக் காத்தவர்களின் பேரால் நுழைவு வாயில்கள் அமைக்கப்படுகின்றன.

இந்தி எதிர்ப்பு போராட்டத்தில் இன்னுயிர் ஈந்த தியாகிகளின் பெயரால் நுழைவு வாயில்கள் அமைக்கப்படுகின்றன.

திருவாரூர் நகரில் மட்டும் 200 வளைவுகள் போடப்படுகின்றன.

தஞ்சைமாவட்டம் முழுவதிலும் எல்லா நகரங்களிலும் பெரியார் நூற்ருண்டு வளைவுகள் போடப் படுகின்றன. மொத்தம் தஞ்சை மாவட்டத்தில் 600 வளைவுகள் போடப் படுகின்றன.

நூற்ருண்டு விழாவுக்கு வருவோர் அனைவருக்கும் போக்குவரத்து வசதிகள் செய்யப்பட்டிருக்கின்றன. 24, 25, 26 ஆகிய மூன்று நாட்களில் தஞ்சைமாவட்டத்தில் எல்லாபகுதிகளில் இருந்தும் திருவாரூருக்கு பேருந்துகள் விடப்படுகின்றன.

26ந்தேதி இரவு முழுவதும் திருவாரூரில்இருந்து மாவட்டத்தின் எல்லா பகுதிகளுக்கும் பேருந்துகள் செல்லுகின்றன.

இவ்வாறு அமைச்சர் எஸ்.டி.எஸ்.கூறியுள்ளார்.

## பிரண்ட்ஸ் ஏஜென்சி நிறுவனம்

சென்னை, ஆக 23- பிரண்ட்ஸ் ஏஜென்சி நிறுவனம் சென்னை பந்தர் தெரு, எண் 39-ல் புதிய கடையை திறந்துள்ளனர். எம். முத்துவின் இந்தநிறுவனத்தை லட்சுமணன் திறந்துவைத்தார். லக்கி ஸ்டோர் நிறுவனம் முதல் விற்பனையைத் தொடங்கி வைத்தது.

காலண்டர்கள், கட்சிக் கொடிகள், தோரணங்கள் பட்டாசுகள், சிலேட்டுகள் பாடப்புத்தகங்கள், திருமணப்பத்திரிகைகார்டுகள் ஆகியவை மொத்தமாகவும், சில்லறையாகவும்விற்கப்படுகின்றன என்று முத்து தெரிவித்தார்.

கடந்த 15 ஆண்டுகளாக ஆப்செட் அச்சக பொருள் விற்பனைத் துறையில் ஈடுபட்டு, படிப்படியாக முன்னேறி இப்போது இந்த புதிய ஏஜென்சி நிறுவனத்தைத் தொடங்கி இருப்பதாகவும் எம். முத்து சொன்னுர்.

## தேர்தல் ஏற்பாடு பற்றி முடிவு எடுக்க ஒரு மாதத்தில்

# கழக செயற்குழு பொதுக்குழு கூடும்

## புரட்சித்தலைவர் அறிவிப்பு

**சென்னை, ஆக. 23- தேர்தல் ஏற்பாடுபற்றிஅனைத்திந்திய அண்ணு தி.மு. கழக செயற்குழு பொதுக்குழு ஒரு மாதத்துக்குள் கூடி முடிவு எடுக்கும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்தார்.**



நாடாளு மன்றத்தைக் கலைத்து இடைத் தேர்தல் நடத்த குடியரசுத் தலைவர் உத்தரவிட்டது பற்றி முதல்வர் புரட்சித்தலைவரிடம் செய்தியாளர்கள் கருத்து கேட்டனர்.

குடியரசுத் தலைவரின் முடிவை புரட்சித்தலைவர் வரவேற்ருர்.

புரட்சித்தலைவர் கூறியதாவது:-

நாடாளுமன்றத்தைக் கலைத்ததன் மூலம் குழப்பம் குறைந்தது. அரசியல் கட்சிகளைச் சேர்ந்தவர்கள் பொது மக்களைச் சந்தித்து அவர்கள் நம்பிக்கையைப் பெற்று மீண்டும் நாட்டுக்குத் தேவையான நல்ல அமைதியான ஆட்சியை ஏற்படுத்த ஒரு வாய்ப்பை குடியரசுத் தலைவர் ஏற்படுத்தி இருக்கிருர் என்று நம்புகிறேன்,

இந்திய துணைக் கண்டத்தில் உள்ள பல்வேறு அரசியல் கட்சித் தலைவர்கள் இந்த வாய்ப்பை நன்கு பயன்படுத்திக் கொண்டு மக்களைச்சந்தித்துநிலையான நல்லரசை ஏற்படுத்த அமைதியான முறையில் செயல்படுவார்கள் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

### மக்கள் நன்மைக்கு...

அத்துடன் பொது மக்களும் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு கொள்கை பிடிப்புள்ளவர்களைத் தேர்ந்தெடுப்பார்கள் என்று நம்புகிறேன்.

சரண்சிங் அவர்களை தேர்தல் முடிகிறவரை அரசைதொடர்ந்துநடத்த அனுமதித்த குடியரசுத் தலைவரைப் பாராட்டுகிறேன்.

பிரதமர் தனக்கு அளிக்கப்பட்ட வாய்ப்பை சட்டம் எந்த அளவுக்கு அனுமதிக்கிறதோ அந்தஅளவுக்கு தங்கள் கொள்கைகளை மக்களின் நன்மைக்கு செயல்படுத்துவார் என்று நம்புகிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினுர்.

### ஒரு மாதத்தில்

தேர்தல்பற்றி அனைத்திந்திய அண்ணு தி.மு.கழகம் என்னமுடிவு எடுத்து இருக்கிறது என்று நிருபர்கேட்ட போது ''இதுபற்றி இன்னும் ஒரு மாதத்துக்குள் கழக செயற் குழுவும், பொதுக் குழுவும் கூடி முடிவு எடுக்கும்'' என்று புரட்சித் தலைவர் கூறினுர்.



தொடர்ந்து அமைச்சராக நீடிப்பார்கள்.

### டாக்டர் நாவலர்

கழகப் பொதுச்செயலாளர் டாக்டர் நாவலர் கூறியதாவது:

சரண்சிங் அமைச்சரவையில் இடம்பெற்றுள்ள கழக அமைச்சர்கள்சத்தியவாணிமுத்து பாலா பழனூர் ஆகியோர் தொடர்ந்து அமைச்சராக நீடிப்பார்கள்.

சரண்சிங்கை ஆதரிப்பது என்று ஏற்கனவே கழகம் எடுத்த முடிவில் மாற்றம் இல்லை.

இடைத்தேர்தலில் எந்த கட்சிகளுடன் கழகம் உடன்பாடு செய்து கொள்ளும் என்பதை முடிவு செய்ய இன்னும் அவகாசம் இருக்கிறது.

கூட்டு பற்றி ஆலோசிக்கும் கட்டம் வரும்போது அதுபற்றி முடிவு செய்யப் படும்.

இவ்வாறு நாவலர் கூறினுர்.

## சரண்சிங்கின் இடைக்கால அரசில் அனைத்து மந்திரிகளும் நீடிப்பு

புதுடெல்லி. ஆக. 23- சரண்சிங் தலைமையில் இப்போதுள்ள 38 பேர் கொண்ட அமைச்சரவை இதே அளவிலேயே நீடிக்கும் என்று தெரிகிறது.

அமைச்சரவையில் இலாக்காக்கள் ஒதுக்கீட்டில்சிலமாறுதல்கள்இருக்கக் கூடும். கழகத்தை சேர்ந்த மத்திய அமைச்சர்கள் பாலா பழனூர், சத்தியவாணிமுத்து ஆகியோருக்கு இலாகாக்கள் ஒதுக்கப்படும்.

அமைச்சர் டி. ஏ. பையிடம் ரெயில்வே, பெட்ரோலியம், ரசாயனங்கள் ஆகிய இருதுறைகள் இருக்கின்றன. ரெயில்வே இலாகா டி. ஏ. பையிடமே இருக்கும். பெட்ரோலியம், ரசாயனங்கள் துறைக்கு ஒரு புதிய அமைச்சகம் ஏற்படுத்தப் படலாம்.

காபந்து அரசு செயல்படுவதற்காக ஜனுதிபதி நிர்ணயித்துள்ள வழி காட்டி கோட்பாடுகளில் நாட்டின் பொருளாதாரத்தை பாதிக்கக்கூடிய முக்கியமான முடிவுகள், பாதுகாப்புசம்பந்தப்பட்ட முடிவுகள் ஆகியவை விலக்கப்படவில்லை என்ற கருத்து அமைச்சர்கள்தரப்பில் நிலவுகிறது.

## தேர்தல்: தலைவர்கள் கருத்து

2-ம் பக்கம்

## இந்திரா காங்கிரசில் எஸ். கே. பாடீல்

புதுடெல்லி, ஆக. 23-காங்கிரஸ் கட்சிப் பிளவின் போது இந்திராகாந்தியை கடுமையாகஎதிர்த்த முன்னாள் மத்திய அமைச்சர் எஸ். கே. பாடீல் இந்திராகாந்தி முன்னிலையில் இந்திரா காங்கிரசில் தம்மை இணைத்துக் கொண்டார்.

★

நாடாளுமன்ற இடைத்தேர்தல்

## ரூ. 20 கோடி செலவு

புதுடெல்லி, ஆக. 23-நாடாளுமன்ற இடைத் தேர்தலை நடத்திட ரூபாய் 20 கோடி செலவாகும் என்று தெரிகிறது.

தேர்தல் செலவுகள் குறித்து நிருபர்கள் தலைமைத் தேர்தல் அதிகாரி சக்தாரைக் கேட்டபோது அவர் தெரிவித்ததாவது:

1977 ஆம் ஆண்டு தேர்தல் நடத்த 16 கோடி ரூபாய் செலவானது. இப்போது மேலும் சில கோடி ரூபாய் செலவு ஆகும். ரூபாய் 20 கோடி வரை செலவு ஆகலாம்.

தேர்தலுக்கு வாக்காளர் பட்டியல் அச்சிட நிறைய காகிதம் தேவை. இப்போது காகிதப் பஞ்சம் நிலவுகிறது. குறைந்த பட்சம் 2,500 டன் காகிதம் தேவை.

சிக்கனமான முறையில் காகிதத்தைப் பயன்படுத்த திட்டமிட்டுள்ளோம். பழுப்புநிற காகிதத்தைக் கூட பயன்படுத்துவோம்.

இதுவரை பிப்ரவரி மார்ச் மாதங்களில்தான் தேர்தல் நடத்தி உள்ளோம்.

டிசம்பரில் தேர்தல் நடத்துவது புதுஅனுபவம். சில தொகுதிகளில் பனிக்கட்டி உறைந்து இருக்கும். அங்கு தேர்தல்கள் தள்ளி வைக்கப்படும்.

1977 தேர்தலில் 33 கோடி வாக்காளர்கள் இருந்தனர். இப்போது மேலும் 3 கோடி வாக்காளர்கள் இருப்பார்கள்.

1979 ஆம் ஆண்டு ஜனவரி முதல் தேதி 21 வயது ஆனவர்களை வாக்காளர் பட்டியலில் சேர்ப்போம்.

செப்டம்பர் முதல் தேதி முதல் வாக்காளர் பட்டியலில் சேர்ப்போம்.

இவ்வாறு தலைமைத் தேர்தல் அதிகாரி கூறினார்.

★

ராஜ்நாராயணன் அறிவிப்பு

## இந்திராவை எதிர்த்து போட்டியிட மாட்டேன்

புதுடெல்லி, ஆக. 23-கடந்த 1977ம் ஆண்டு நடந்த நாடாளுமன்றத் தேர்தலில் உத்தரப்பிரதேச மாநிலம் ரேபரேலி தொகுதியில் இந்திராவை எதிர்த்து போட்டியிட்டு ராஜ்நாராயணன் தோற்கடித்தார். இப்போது இந்திராவை எதிர்த்து போட்டியிட மாட்டேன் என்று ராஜ்நாராயணன் கூறியுள்ளார்.

டெல்லியில் ராஜ்நாராயணன் நிருபர்களுக்கு அளித்த பேட்டியின்போது கூறியதாவது:-

ஒருமுறை இந்திரா காந்தியைத் தோற்கடித்துவிட்டேன். மீண்டும் அவரை தோற்கடிப்பது எனக்கு அழகல்ல.

ஜெகஜீவன்ராம் பலம் இழந்திருக்கிறார். அவரை எதிர்த்து நான் போட்டி இடமாட்டேன்.

தேர்தலில் நான் போட்டி போட்டாலும் போடலாம். போட்டி போடாமலும் இருக்கலாம்.

இப்போது வளர்க்கும் தாடியை வகுப்புவாத-சர்வாதிகார சக்திகளை எங்கள் கட்சி முறியடித்த பிறகே எடுப்பேன்.

இவ்வாறு ராஜ் நாராயணன் கூறினார்.

# இந்திய வரலாற்றில் இரண்டாவது இடைத் தேர்தல்:

# அரசியல்கட்சிகள் தீவிரம்

## நாடாளுமன்றக் கலைப்பு பற்றி தலைவர்கள் கருத்து

புதுடெல்லி, ஆக. 23-இந்திய நாடாளுமன்ற வரலாற்றில் இரண்டாவது முறையாக வரும் நவம்பர்-டிசம்பர் மாதங்களில் நாடாளுமன்றத்திற்கு இடைத் தேர்தல்கள் நடைபெறுகின்றன. தேர்தல் நெருங்குவதால் அனைத்துக் கட்சிகளும் சுறுசுறுப்புடன் தேர்தலுக்கு ஆயத்தம் ஆகிவருகின்றன. நாடாளுமன்றத்தைக் கலைத்து இடைக்காலத் தேர்தல் நடத்த ஜனாதிபதி உத்தரவிட்டிருப்பதை பெரும்பாலான கட்சிகள் வரவேற்று இருக்கின்றன. ஜனதாக் கட்சி இதைக் கடுமையாக எதிர்த்துள்ளது. ஜனாதிபதி மீது மாநிலங்களவையில் தேசத்துரோக (இம்பீச்மெண்டு) குற்றச்சாட்டு கொண்டு வரப் போவதாக ஜனதாக் கட்சித் தலைவர் சந்திரசேகர் அறிவித்துள்ளார்.

நாடாளு மன்றத்திற்கு வரும் நவம்பர்-டிசம்பர் மாதங்களில் நடக்கவிருக்கும் இடைத் தேர்தல் இந்திய அரசியல்அமைப்பு 1950ல் அமலுக்கு வந்த பிறகு நடக்கவிருக்கும் இரண்டாவது இடைத் தேர்தல் ஆகும்.

### முதல் இடைத்தேர்தல்

முதலாவது இடைக் காலத் தேர்தல் 5 வது பொதுத் தேர்தலுக்கு ஒரு ஆண்டுமுன்னதாக 1971ல் நடந்தது.

அப்போது சிறுபான்மை அரசுக்கு தலைமை வகித்துக் கொண்டிருந்த இந்திராகாந்தி மக்களிடமிருந்து புதிய கட்டளையைப் பெற முடிவு செய்து இடைக்காலத்தேர்தலுக்கு ஏற்பாடுசெய்தார்

1970 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் கடைசி வாரத்தில் நாடாளுமன்றம் கலைக்கப்பட்டு இரண்டு மாதங்களுக்குப் பிறகு தேர்தல்கள் நடந்தன.

அதற்கு மாறாக 6-வது பொதுத் தேர்தல் 1977ல் தான் நடந்தது. அவசர கால நிலையின்போது நாடாளுமன்றத்தின் பதவிக்காலம் ஆறு ஆண்டுகளாக நீடிக்கப்பட்டது.

நேற்று (புதன் கிழமை) கலைக்கப்பட்ட நாடாளுமன்றம் இரண்டு ஆண்டு 5 மாதம் தான் (883 நாட்கள்) பதவி வகித்துள்ளது.

நாடாளுமன்றம் கலைக்கபட்டு இடைத்தேர்தல்கள் அறிவிக்கப் பட்டதைப் பெரும்பாலான கட்சிகள் வரவேற்றுள்ளன.

ஜனதாக் கட்சி நாடாளுமன்றக் கலைப்பை கடுமையாக எதிர்த்துள்ளது.

### சரண்சிங்

ஜனாதிபதியின் முடிவு தமக்கு முழு திருப்தியை அளித்திருப்பதாக பிரதமர் சரண்சிங் புதுடெல்லியில் நிருபர்களிடம் கூறினார். ஜனாதிபதிக்கு தனது மனப்பூர்வமான நன்றியைச் செலுத்துவதாகவும் நிருபர்களிடம் கூறினார்.

### ராஜ்நாராயணன்

அரசியல் சட்டத்தின் கண்ணியத்தை ஜனாதிபதி நிலை நாட்டியிருக்கிறார். ஜனாதிபதிக்கு எனது பாராட்டுக்கள். இன்னும் முன்னாலேயே நாடாளுமன்றம் கலைக்கப்பட்டிருக்க வேண்டும். நான் எந்தத் தொகுதியில்போட்டியிடப் போகிறேன் என்பதை இப்பொழுது சொல்லுவதற்கில்லை. என்று ஜனதா (எஸ்) கட்சித் தலைவர் ராஜ்நாராயணன் தெரிவித்தார்.

### ஸ்டீபன்

நாடாளுமன்றம் கலைக்கப்பட்டதை வரவேற்கிறேன் என்று இந்திரா காங்கிரஸ் தலைவர்ஸ்டீபன் கூறினார்.

சரண்சிங் காபந்து பிரதமராக இருக்க அனுமதிக்கலாகாது. சரண்சிங் அரசு காபந்து அரசாக நீடிக்க அனுமதித்தால் தேர்தல் சுதந்திரமாகவும் நேர்மையாகவும் நடக்காதிருக்கக் கூடும் எனவும் ஸ்டீபன் தெரிவித்தார்.

### அர்ஸ்

ஜனாதிபதி நாடாளுமன்றத்தைக் கலைத்து உத்தரவிட்டதை கருநாடக முதல்வர் தேவராஜ் அர்ஸ் வரவேற்றார். நாடாளுமன்றத்தை கலைத்ததன் மூலம் ஜனாதிபதி விவேகமாக நடந்து கொண்டுள்ளார் என்று மராட்டிய போட்டி காங்கிரஸ் தலைவர் டி. டி. ரூபவதே கூறினார்.

### வாஜ்பாயி

நாடாளுமன்றம் கலைக்கப்பட்டது பற்றி வாஜ்பாயி கூறுகையில், நடந்துபோன விஷயங்களைப் பற்றி கிளறிக் கொண்டு நேரத்தை வீணாக்கக்கூடாது. சரண்சிங் கோஷ்டி போன்றவைகளின் நெறிகெட்ட அரசியலுக்கு முடிவு கட்ட வேண்டும் என்றார்.

### சந்திரசேகர்

நாடாளுமன்றத்தைக் கலைத்து இடைத்தேர்தலுக்கு உத்தரவிடுவது என ஜனாதிபதி செய்துள்ள முடிவு நம்பமுடியாத அளவுக்கு அபத்தமானதாகும் என்று ஜனதாக் கட்சித் தலைவர் சந்திரசேகர் கூறினார்.

இதில் புத்தி பூர்வமான எதையும் காணமுடியவில்லை. இவ்வளவு பெரிய பதவியை வகிக்கும் ஒருவருக்கு இது பெருமை அளிக்கக் கூடியதல்ல என்றும்சந்திரசேகர் சொன்னார்.

### பாபுபாய் பட்டேல்

வேறுமாற்று வழிகளும் இருந்தன. ஜனாதிபதி அவற்றை அமல் நடத்தியிருக்கலாம்என்றுகுஜராத் முதல்வர் பாபுபாய் பட்டேல் கூறினார்.

### கிருபளானி

ஜனாதிபதி நாடாளுமன்றத்தைக் கலைத்து மறு தேர்தலுக்கு உத்தரவிட்டது சரியானதில்லை. மறு தேர்தல் நடத்துவதை நான் ஆதரிக்கவில்லை, ஜனாதிபதி பொதுமக்களின் விருப்பத்துக்கு மாறான ஒரு முடிவை மேற்கொண்டுள்ளார். சரண்சிங் தொடர்ந்து காபந்து அரசில் பிரதமராக நீடிக்கச் செய்வது என்பது சரியானது இல்லை என்று கிருபளானி தெரிவித்தார்.

### எஸ். என். மிஸ்ரா

ஜனாதிபதி எடுத்தமுடிவு முற்றிலும் சரியானதாகும். ஜனாதிபதிக்கு நன்றி செலுத்துகிறோம். நாட்டு மக்கள் ஆறுதல் அடைகின்றனர் என்று மத்திய அமைச்சர் எஸ். என். மிஸ்ரா கூறினார்.

### வி.வி.கிரி

நாடாளு மன்றத்தைக் கலைப்பது என்ற ஜனாதிபதியின் முடிவுபற்றி கருத்துக் கூற முன்னாள் ஜனாதிபதி வி.வி. கிரி மறுத்து விட்டார்.

### மொரார்ஜி

எதிர்க்கட்சித தலைவர் ஜெகஜீவன்ராம் புதிய அரசு அமைக்க வாய்ப்பளிக்காமல் நாடாளுமன்றத்தை ஜனாதிபதி கலைத்த உத்தரவு முற்றிலும் அரசியல் சாசனத்துக்கு விரோதமானதுஎன்றுமொரார்ஜி தேசாய் கூறினார்.

### ஜெயப்பிரகாஷ் நாராயண்

நாடாளுமன்றத்தைக் கலைக்கும் ஜனாதிபதியின் முடிவு அறிவிக்கப்பட்டதும் ஜெயப்பிரகாஷ்நாராயணுக்கு தெரிவிக்கப்பட்டது. ஆனால் அவர் கருத்து எதுவும் கூறவில்லை என்று அவரது அந்தரங்க காரியதரிசி சச்சிதானந்த் கூறினார்.

### பல்கிவாலா

ஜனாதிபதி நாடாளுமன்றத்தை கலைத்தது அரசியல் சட்டமரபை மீறும் அளவுக்கு நியாயமற்றதுஎன்று பிரபல அரசியல் சட்ட வல்லுநர் பல்கிவாலா கூறினார்.

### ஜனதா கட்சி

நாடாளுமன்றத்தை கலைப்பது என்ற ஜனாதிபதியின் முடிவுக்கு பார்லிமெண்ட் ஜனதா கட்சி அதிகார பூர்வமான ஆட்சேபம் தெரிவித்துள்ளது. ஜனாதிபதி வகிக்கும் உயர்ந்த பதவிக்கு இது தகுதியில்லாதது. அவரது கடமைக்கு அப்பாற்பட்டதான காரணங்கள் அவரை ஆட்கொள்ள அனுமதித்து விட்டார் என்ற முடிவுக்கு மட்டுமே தேசம் வரமுடியும் என்று கூறியுள்ளது.

### ஜெகஜீவன்ராம்

ஜனாதிபதி சஞ்சீவ ரெட்டி இந்திய ஜனாதிபதி போல் மட்டும் அல்லாமல் அமெரிக்க ஜனாதிபதி போலவும் செயல்பட விரும்புகிறார். ஜனாதிபதியின் நாடாளுமன்ற கலைப்பு செயல் ஒரு திட்டமிட்டசதியின்பகுதி. ஜனாதிபதியின் இச்செயலை நாடு சகித்துக் கொள்ளாது என்று ஜெகஜீவன்ராம் கூறினார்.

### இடது கம்யூனிஸ்டு

நாடாளு மன்றத்தைக் கலைத்துப் புதிதாகத் தேர்தல்நடத்த ஜனாதிபதி உத்தரவிட்டுள்ளதை இடதுக் கம்யூனிஸ்டுகட்சி பொலிட் பீரோ வரவேற்றுள்ளது.

### பென்சன்

கலைக்கப்பட்ட நாடாளுமன்றத்தில் சுமார் 340 பேர் புதிய உறுப்பினர்களாவர். அவர்கள் நடைபெறவிருக்கும் தேர்தலில் மீண்டும் ஒருமுறை தேர்ந்தெடுக்கப் பட்டாலன்றி அவர்கள் பென்சன் பெற தகுதியற்றவர்களாகிடுவர்

# தேசிய கடன் படிப்பு உதவித் தொகைதிட்டம் பற்றிய அறிவிப்பு

சென்னை, ஆக. 23--மத்திய அரசு தேசிய கடன் படிப்பு உதவித் தொகை வழங்கும்திட்டத்தைசெயல் படுத்தி வருகிறது. கலை, விஞ்ஞானம், வணிகம், பொறியியல், தொழில் நுட்பம், மருத்துவம், வேளாண்மை, சட்டம் கல்வி ஆகியவற்றில் முறையான முழுநேரப் படிப்பை அங்கீகாரம் பெற்ற கல்லூரிகளில் பயின்றுவரும் மாணவ மாணவிகள் இவ்வாண்டும் வழக்கம்போல் பெற மத்தியஅரசுதமிழ்நாட்டிற்கு ஒதுக்கிய பங்கிற்கு ஏற்ப, கீழ்க்கண்ட பள்ளி, கல்லூரித் தேர்வுகளில் (தமிழ்நாட்டில் பல்கலைக் கழகங்களால் அல்லது அரசு மன்றங்களால் நடத்தப்படும்) 50 சத மதிப்பெண்கள் பெற்ற அடிப்படையில் தகுதியுள்ளவர்களாக கருதப்படுகிறார்கள்.

மெட்ரிக்குலேஷன், எஸ். எஸ். எல். சி, (பத்து ஆண்டு படிப்பு) (புதிய திட்டம்) எஸ். எஸ். எல். சி. (பதினொருஆண்டு படிப்பு) ஆங்கிலோஇந்தியன் உயர் நிலைப் பள்ளித் தேர்வு, இளநிலை தொழில் நுட்பப் பள்ளித் தேர்வு, பட்டப் படிப்பு பி. ஏ., பி. எஸ்ஸி பி.காம், பி. ஈ., பி.எஸ்ஸி, (விவசாயம்), எம்.பி, பி. எஸ், பட்டமேற்படிப்பு எம். ஏ. எம். எஸ்ஸி எம். காம், அல்லது இவைகளுக்கு இணையான தொழில் நுட்ப, தொழில் (விவசாயம்) கல்வித் தேர்வு.

இத்திட்டத்திற்கு விண்ணப்பிக்கும் மாணவர்களின் ஆண்டு வருமானமும் அவர்களின் பெற்றோர்களின் ஆண்டு வருமானமும் சேர்ந்து ரூ. 6000 (ரூபாய் ஆறாயிரம்)-க்கு மேல் இருக்கக்கூடாது.

பட்ட மேற்படிப்பு பயிலும் மாணவ, மாணவிகள் அவர்களின் பெற்றோர்களின் ஆண்டு வருமானம் ரூ.6000 (ஆறாயிரத்திற்கு) மேலிருப்பினும் இத்திட்டத்திற்கு விண்ணப்பிக்க தகுதிவாய்ந்தவர்கள்.

தேசியப் படிப்பு உதவித் தொகைப் பெறவிரும்பும் மாணவ மாணவிகள் கல்லூரிகளில் இதுவரை சேராமலிருப்பினும் இவ்வலுவலகத்திலிருந்து விண்ணப்பங்களைப் பெற்று முறையாகப் பூர்த்தி செய்து, தேவையான சான்றிதழ்களுடன் குறிப்பிட்ட தேதிக்குள் இவ்வலுவலகத்திற்கு அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். அவர்கள் கல்லூரியில் சேர்ந்ததற்கான அறிக்கையைகல்லூரியில் சேர்ந்த பின்னர் அந்த கல்லூரி முதல்வர் மூலமாக இந்த அலுவலகத்திற்கு அனுப்பி வைக்கவேண்டும்.

விண்ணப்பத் தாள்களைப் பூர்த்திசெய்துஉரிய கல்வி நிலையத் தலைவர்கள் வழியாக-கல்லூரிக் கல்வி இயக்குனர் அலுவலகத்திற்கு 15-9-79க்குள் அனுப்பி விடவேண்டும். மேற்குறிப்பிட்ட தேதிக்குப்பிறகு இவ்வலுவலகத்திற்கு வரும் விண்ணப்பங்கள் நிராகரிக்கப்படும். கல்வி நிலையத் தலைவர்கள் தங்களுக்குத் தேவையான விண்ணப்பப் படிவங்களை இவ்வலுவகத்திலிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

தலைமைத் தேர்தல் அதிகாரி அறிவிப்பு:

# புதுவை மாநில சட்ட சபைக்கு டிசம்பரில்தேர்தல்

புதுடெல்லி, ஆக 23- டிசம்பர் மாதம் நாடாளுமன்றத்துக்க தேர்தல் நடைபெறும்போது புதுவை மாநில சட்டமன்றத்துக்கும் தேர்தல் நடைபெறும் என்று தலைமை தேர்தல் கமிஷனர் தெரிவித்துள்ளார்.

புதுவை மாநில சட்ட மன்றம் கலைக்கப்பட்டு அங்கே குடியரசுத்தலைவர் ஆட்சி நடைபெற்று வருகிறது.

புதுவை மாநில வாக்காளர் பட்டியல்கள் திருத்தப்பட்டு சட்டமன்றத்துக்கு பொதுத் தேர்தல் நடத்த எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டன.

தேர்தல் தேதியும் அறிவிக்கப்பட்டது. அப்போது இருந்த மத்திய அரசு கவிழ்ந்து விட்டதால் ஏற்பட்ட அரசியல் நெருக்கடி காரணமாக புதுவை மாநில சட்ட மன்றத் தேர்தல் தேதி குறிப்பிடாமல் ஒத்திவைக்கப்பட்டது.

டிசம்பர் மாதம் புதுவை சட்டமன்றத் தேர்தல் நடைபெறும் என்று தலைமைத் தேர்தல் கமிஷனர் சக்தார் டெல்லியில் தெரிவித்தார்.

நாடாளுமன்றம் கலைக்கப்பட்டுள்ளதால் வரும் டிசம்பர் மாதம் நாடாளுமன்றத்துக்கு மறுதேர்தல் நடைபெறும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது,

நாடாளுமன்றத் தேர்தலோடு சேர்த்து புதுவை, கோவாபோன்ற யூனியன் பிரதேசங்களும், சிக்கிம், மணிப்பூர் போன்றமாநில சட்டமன்றங்களுக்கும் தேர்தல் நடத்தப்படும் என்று தேர்தல் கமிஷனர் சக்தார் தெரிவித்தார்.

தொழில் தகராறு சட்டத் திருத்தம்

# தொழிற்சாலையை மூடினால் 6 மாதம் சிறை: ஆளுநர் அவசரச்சட்டம்

**சென்னை, ஆக. 23- தமிழ்நாடு தொழில் தகராறு அவசர சட்டம் பிறப்பிக்கப்பட்டுள்ளது. தொழிற்சாலையை மூடினால் 6 மாதம் முதல் ஒரு வருடம் வரை சிறை தண்டனை விதிக்க வகை செய்யும் இந்த அவசரச் சட்டத்தை ஆளுநர் பிறப்பித்தார்.**



1947ம் ஆண்டு தொழில் தகாராறு சட்டத்தில் ஒரு திருத்தம் செய்து தமிழக ஆளுநர் நேற்று இரவு ஒரு அவசரச் சட்டத்தைப் பிரகடனம் செய்தார்.

தொழில் தகராறு, தொழில் கோர்ட்டுகள் அல்லது டிரிப்யூனலின் பரிசீலனைக்கு விடப்படுகையில் அரசு குறிப்பிட்டுள்ள வேலை வாய்ப்பு நிபந்தனைகளைக் கடைபிடிக்குமாறு நிர்வாகத்தினர் அல்லது தொழிலாளர்களை கோர அரசுக்கு அவசர சட்டம் மூலம் ஏற்படுத்தப்படும் புது ஷரத்து அவசியமான அதிகாரங்களை வழங்குகிறது. இந்த அவசர சட்டத்துக்கு 1947-ம் ஆண்டு தொழில் தகராறு (த.நா. திருத்த) அவசர சட்டம் என்று பெயர்.

தொழில் தகராறு சட்டத்தில் இதன்மூலம் 10-பி என்ற புது ஷரத்து ஏற்படுத்தப்படுகிறது. 10-ஏ ஷரத்துக்கு அடுத்தபடியாக இது இருக்கும்.

இந்த அவசர சட்டம் மூலம் எந்த பொது உபயோக நிறுவனங்களையும், மூடக் கூடாது. அரசு அறிவிக்கும் நிபந்தனைகளின்படி செயல்பட வேண்டும் என்று சொல்லும் அதிகாரம் அரசுக்கு இருக்கும்.

இந்த அவசரச் சட்டம் தமிழ்நாடு முழுவதும் உடனடியாக அமலுக்கு வருகிறது. அவசரச் சட்ட உத்தரவின் கீழ் நடக்காதவர்களுக்கு 6 மாதம் முதல் ஒரு வருடம் வரை சிறை தண்டனையும் அபராதமும் விதிக்க அவசரச் சட்டத்தின் மற்றொரு ஷரத்து வகை செய்கிறது.

## அரங்கநாயகம் நிகழ்ச்சிகள்

ஆக.24-ம் தேதி மதுரையில் இருந்து கார் மூலம் புறப்பட்டு தேனி செல்கிறார். காலை 10 மணிக்கு பள்ளி நிகழ்ச்சியில் கலந்து கொள்கிறார். 11 மணிக்கு கொடுவிளைப்பட்டியில் பாலமந்திர் திறப்பு விழா. 12 மணிக்கு ஸ்ரீரங்கபுரம் பள்ளி நிகழ்ச்சி. 3 மணிக்கு கொச்சலூர் ஒன்றிய பள்ளித் திறப்பு விழா மற்றும் உள்ளூர் நிகழ்ச்சிகளில் கலந்து கொள்கிறார். இரவு ராஜபாளையம்.

25ம் தேதி திருவில்லிப்புத்தூரில் காலை 9-மணிக்கு சாரணர் விழா 10மணிக்கு ஆசிரியர்கள் ஆண்டுவிழா, 11-மணிக்கு அம்சாபுரம் நாடார் மேல்நிலைப்பள்ளி கட்டிடத் திறப்புவிழா, 4-மணிக்கு குழந்தைகள் காப்பகத் திறப்புவிழா 4-40 மணிக்கு வெள்ளப் பொட்டல் குழந்தைகள் காப்பகத் திறப்புவிழா 5-மணிக்கு ஸ்ரீரங்கபாளையம்பள்ளிநிகழ்ச்சி 6மணிக்கு பெருமாள் பட்டிநகர் மன்றக் கட்டிடத் திறப்புவிழா இரவு விருதுநகர்.

26ம் தேதி விருதுநகரில் உள்ளூர் நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளுதல். திருவாரூரில் தந்தை பெரியார் விழாவில்கலந்து கொண்டுவிட்டு சென்னை திரும்புகிறார். நிகழ்ச்சிகளில் தேனி ஜெயராமனும், தாமரைக்கனியும் கலந்து கொள்கிறார்கள்.

## புதுவண்ணை

24-8-79 வெள்ளி மாலை 7 மணிக்கு பாஷியம்நாயுடு தெருவில் (சுழல்மெத்தை அருகில்) வண்ணை மு. பாண்டியன் தலைமையில் பேசுவோர்:

அமைச்சர் ஜி. ஆர். எட்மண்ட், எம். எஸ். அப்துல் காதர், வை. பெருமாள், கண்ணப்ப ராஜேந்திரன், மதுசூதனன், ஏ. தாஸ், ராஜி, விநாயகம், ஆனந்த கதிரவன், தாமோதரன் மற்றும் பலர்.

## தி. நகர்

சென்னை 117-வது வட்டம் பொதுஉறுப்பினர்கள் கூட்டம் 25-8-79 சனிக்கிழமை இரவு 7 மணிக்கு மேற்கு மாம்பலம்தம்பைய வட்டத்தெருவில் உள்ள T. N. T. பள்ளி அரங்கில் சா. கோவிந்தசாமி தலைமையில் நடைபெற இருக்கிறது. கூட்டத்தில் கழகத்தோழர்களும், சார்பு மன்ற நிர்வாகிகளும் தவறாது கலந்துகொள்ள கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

## ராதாகிருஷ்ணன் நகர்

சென்னை 20வது வட்ட பொது உறுப்பினர் கூட்டம், வட்ட அமைப்பாளர் கே.ஏ. சமத் தலைமையிலும், வண்ணை க. சண்முகம் முன்னிலையிலும் 26-8-79 ஞாயிறு இரவு 7-மணிக்கு எண் 46, தர்மராஜா கோவில் தெருவில் நடக்கிறது. கூட்டத்தில் கழக உறுப்பினர்களும், சார்பு மன்றத் தோழர்களும் தவறாது கலந்து கொள்ளும்படி கேட்டுக்கொள்ளப் படுகிறார்கள்.

பெண்களுக்கு 25 சதவீத இடம்: சலுகை பெற வருமான வரம்பு

# புரட்சித்தலைவர் திட்டம்: அமெரிக்க தமிழர்கள் வரவேற்பு-பாராட்டு

**சென்னை, ஆக. 23- தமிழக முதல்வர் ஆட்சியை அமெரிக்காவில் உள்ள தமிழர்கள் வெகுவாகப் பாராட்டுகிறார்கள். பெண்களுக்கு 25 சதவிகித இட திட்டத்தையும் வருமானவரம்பு 9ஆயிரம் ரூபாய் திட்டத்தையும் அவர்கள் வரவேற்றுள்ளனர்.**



அமெரிக்காவில் உள்ள தமிழ் நாடு நிறுவன உறுப்பினர்களான டாக்டர் பிச்சுமணியும், அவரது துணைவியார் பாலாமணியும் சென்னைக்கு வந்தனர்.

அமெரிக்காவில் அல்புகஞ்சி பகுதியில்மெக்சிகோ பல்கலைக்கழகத்தில் பேராசிரியராக பணியாற்றுபவர் டாக்டர் பிச்சுமணி.

தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் அமெரிக்கா சென்றபோது லாஸ் ஏஞ்சலில் சிறப்பான வரவேற்பு ஏற்பாடுகளை செய்தவர் டாக்டர் பிச்சுமணி. இந்தோ அமெரிக்க கலாச்சார சங்கத்திலும் இவர் உறுப்பினராக உள்ளார்.

டாக்டர் பிச்சுமணி தம்பதிகள் தமிழக முதல்வர் புரட்சித்தலைவரை சந்தித்துப் பேசினார்கள்.

தமிழ் நாட்டில் உள்ளாட்சி அமைப்புகளில் தேர்தலில் பெண்களுக்கென 25 சத விகித இடங்கள் ஒதுக்கீடு செய்யும் முறையை தமிழக முதல்வர் அறிவித்துள்ளதை அமெரிக்காவில் உள்ள தமிழர்கள் வரவேற்கின்றனர்.

பிற்பட்டவர்களுக்கு வருமான வரம்பு ரூ. 9-ஆயிரம் என்று நிர்ணயித்து அரசு பிறப்பித்துள்ள உத்தரவு சிறந்தது. எந்தக் காரணத்தைக் கொண்டும் அந்த உத்தரவை வாபஸ் வாங்கக் கூடாது என்று அமெரிக்காவில் உள்ள தமிழர்கள் தெரிவித்ததாக டாக்டர் பிச்சுமணி தம்பதியினர் தமிழக முதல்வர் புரட்சித்தலைவரிடம் தெரிவித்தனர்.

தமிழ்நாட்டில் சிறந்த முறையில் ஆட்சி நடைபெறுவதாகவும், முதல்வர் புரட்சித்தலைவர் [illegible] அமெரிக்காவில் வாழும் தமிழர்கள் தெரிவித்த பாராட்டுதல்களையும் பிச்சுமணி தமிழக முதல்வரிடம்தெரிவித்தார்.

டாக்டர் பிச்சுமணி தம்பதியினர் தமிழகமுதல்வரை சந்தித்துப் பேசிய போது மக்கள்நல்வாழ்வுத் துறை அமைச்சரின் பேரவைச் செயலர் நாமக்கல் அருணாசலம் உடன் இருந்தார்.

## கழகச் செய்திகள்

### சேப்பாக்கம்

சென்னை 88 வது வட்ட பொது உறுப்பினர்கள் கூட்டம் 24-8 79 வெள்ளி மாலை 7 மணியளவில் 13. பங்காரு நாயக்கன் தெரு என்ற இல்லத்தில் நடைபெறும். கூட்டத்தில், அமைப்பாளர் கோவை கணேசன் கலந்து கொள்கிறார். கூட்டத்தில் கழகத்தோழர்களும், சார்பு மன்ற நிர்வாகிகளும் கலந்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்,

### மதுரை

29-8 79 புதன் மாலை 7 மணிக்கு மைனா தெப்பக்குளம் அருகே வி. பெருமாள் தலைமையில் பேசுவோர்: அமைச்சர்கள் எஸ்.டி.எஸ். ஜி. ஆர். எட்மண்ட் மதுரை மேயர் முத்து, துணைமேயர் கே. எஸ். சந்தானம், எஸ்,ஆர் ராதா எம். எல். ஏ. பொ. அன்பழகன் லட்சுமி நாராயணன் எம். எல், ஏ. வெ. பாலகுரு எம். எல். ஏ. எஸ். செல்வராஜ் எம். எல். ஏ. இரா.. முத்தையா எம், எல்.ஏ. அ.மா. பரமசிவம் எம்.எல்.ஏ. மற்றும் பலர்.

### சிந்தாதிரிப்பேட்டை

சென்னை 87-வதுவட்டப் பொது உறுப்பினர் கூட்டம் தொகுதிகழக அமைப்பாளர் வி. ராஜ்குமார் முன்னிலையில் 25-ந்தேதி சனிக்கிழமைஇரவு 7-மணியளவில் 24 சுங்குவார் அக்கிரகாரம் எண்ணுள்ள இடத்தில நடைபெறுகிறது. கூட்டத்திற்குகழகத் தோழர்களும், கழகச் சார்புமன்ற நிர்வாகிகளும் கலந்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

# அண்ணா



## அமைச்சர் எஸ். டி. எஸ். நிகழ்ச்சிகள்

ஆக. 24-ந்தேதி திருவாரூரில் தஞ்சை பெரியார் நூற்றாண்டு விழா பணிகள் மேற்பார்வை.

25, 26-ந் தேதி திருவாரூர் தந்தை பெரியார் நூற்றாண்டு விழாவில் பங்கேற்பு.

27ந்தேதி சிதம்பரம் தில்லை வில்லாளன் பொன் விழாவில் கலந்துகொள்ளுதல்,

# கருணாநிதி புளுகு: வெள்ளையன் நோட்டீஸ்

## மறுப்பு வெளியிடத் தவறினால் மானநட்ட வழக்கு தொடரப்படும்

**சென்னை, ஆக. 23- தன்னைப்பற்றி 'முரசொலி' ஏட்டில் கருணாநிதி எழுதியுள்ள பொய்ச் செய்திக்கு 'மன்றம்' பொறுப்பாசிரியர் இராம. வெள்ளையன் கண்டனம் தெரிவித்துள்ளார். மறுப்பு செய்தி வெளியிடவில்லை என்றால் மானநட்ட வழக்கு தொடரப்படும் என்றும் அவர் கூறியிருக்கிறார்.**

கடந்த மாதம் ஜூலை 1ந் தேதி வெளியான முரசொலி ஏட்டில் கருணாநிதி, தன் பெயரைக் குறிப்பிடாமல் தன்னைப் பற்றிக் கூறிய பொய்ச் செய்திக்கு வன்மையாக கண்டனம் தெரிவித்து மன்றம் வார இதழ் பொறுப்பாசிரியர் ராம. வெள்ளையன் கருணாநிதிக்கு நோட்டீஸ் அனுப்பியிருக்கிறார்.

அந்த நோட்டீசில் ராம. வெள்ளையன் கூறியிருப்பதாவது:

நான் 25 ஆண்டுகளுக்கு மேலாக 1977 மே மாதம் வரையில் திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினராகவும், தொண்டனாகவும் இருந்து வந்திருக்கிறேன்.

தேவகோட்டை நகராட்சி மன்றத்தில் 1956 முதல் 58 வரை நகராட்சி உறுப்பினராகவும் 1669 முதல் 76 வரை நகர்மன்றத் தலைவராகவும் இருந்திருக்கிறேன்.

இன்றும்தேவகோட்டை கூட்டுறவு அர்பன் வங்கி லிமிடெட் தலைவராகவும், தேவகோட்டை கூட்டுறவு வீடு கட்டும் சங்கத்தின் தலைவராகவும் இருந்து வருகின்றேன்.

1978ஜூலைமாதம் முதல் இன்றுவரை டாக்டர் நாவலர் அவர்களை ஆசிரியராகக் கொண்ட மன்றம் தமிழ் வார இதழை வெளியிடுபவனாகவும் பொறுப்பாசிரியராகவும் இருந்து வருகின்றேன்.

தேவகோட்டையில் 1958 பிப்ரவரி 22, 23 தேதிகளில் நடைபெற்ற முகவை மாவட்ட திமுக மாநாட்டுக்கு நான் ஒரு செயலாளர். அந்த மாநாட்டை நான்தான் முழுப் பொறுப்பேற்று நடத்தினேன். இது தங்களுக்கு மிகவும் நன்கு தெரியும். அப்படி தெரிந்திருந்தும் தாங்கள் என் பெயரைச் சொல்லாமல் எழுதியிருக்கிறீர்கள். அதில் வெளியிடப்பட்டுள்ள அவதூறான செய்திகள் என்னைத்தான் குறிக்கும் என்பதனையும் தாங்கள் நன்கு அறிவீர்கள். ஆகையால் உங்களது அறிக்கை பொய்யானது மட்டுமல்ல. அவதூறானதும் ஆகும்.

மாநாட்டுப் பணம் ரூ. 4000 பறிபோனது பற்றி நான் பரபரப்புடன் அண்ணாவிடம் சொல்ல வந்ததும் அவர் என்னை வியப்புடன் பார்த்து அன்றைய தினம் ஞாயிற்றுக்கிழமையாதலால் உங்கள் ஊரில் ஞாயிறன்று வங்கி இருக்கின்றதா என்று சந்தேகப்பட்டு அண்ணா என்னைக் கேட்டதைப்போல நிகழ்ச்சி நடந்ததாக எழுதியிருக்கிறீர்கள்.

### கற்பனைப் பொய்

ஆனால் இதெல்லாம் நடக்கவில்லை. உண்மையில் நடந்தது என்னவென்றால், என்னை ஞாயிற்றுக்கிழமை காலையில் நான் பாங்கிற்குப் பணம் கட்டச் சென்றபோது, அடித்துவிட்டு பணத்தைப் பறித்துக்கொண்டு ஓடிவிட்டார்கள் என்று அன்றைய தினம் தேவகோட்டை நகர போலீசில் புகார் கொடுக்கப்பட்டது. நான் காயம்பட்டு, மருத்துவமனையில் கட்டுக்கட்டி, வீட்டில் படுத்திருந்தேன். என்னைப்பார்க்க அண்ணா, நாவலர், சம்பத் தாங்கள் இன்னும் திமுக முக்கியஸ்தர்கள் பலர் வந்து இருந்தார்கள்.

அன்று மாலை 6 மணிக்கு மேல் மாநாட்டுமேடைக்கு வந்திருந்தேன். நீங்கள் எழுதியதைப் போல அன்றைய தினம் தாங்கள் சொல்வதைப் போல, நான் அண்ணாவிடத்தில் பரபரப்புடன் வந்து 4 ஆயிரம் ரூபாயை பறித்துக்கொண்டு போய் விட்டார்கள் என்று நான் சொல்லவில்லை.

ஆகையால் நீங்கள்எழுதியிருப்பது உண்மையில்லை. அண்ணா அவர்கள் பணம் பறிபோனது பற்றிப் பொய்யாகச்சொல்கிறேன் என்று நினைத்து அன்று மாநாட்டில் அண்ணா உற்சாகமாக இல்லை என்று தாங்கள் என்னுடைய நேர்மைக்குக் களங்கம் ஏற்படும் வகையில் எழுதியிருக்கிறீர்கள். அப்படிப்பட்ட எந்த நிகழ்ச்சியும் ஏற்படவில்லை. மாநாடு பாதிக்கப்படவுமில்லை.

### மாநாடு சிறப்பாக நடந்தது

மாநாடு வெகு சிறப்பாக நடந்தது. இது தங்களுக்கும் மற்ற அனைவருக்கும் நன்கு தெரியும். முகவை மாவட்ட தி.மு.க நண்பர்கள்சேர்ந்து என்னை தி. மு. கழகத்தில் இருந்து சில ஆண்டு காலம் தள்ளி வைத்துள்ளதாகவும் எழுதியிருக்கிறீர்கள். இது முற்றிலும் பொய்.

மன்றத்தின் சார்பில் வெளியிட்ட மலரை நூல் நிலைய சிறப்பு என்றுவெளியிட்டு அரசாங்கத்திற்கு விற்பனை செய்திருக்கிறேன் என்று எழுதியிருப்பது முற்றிலும் பொய். நான் ''மன்றம்'' மூலம் 50 ஆயிரம் ரூபாய் 60 ஆயிரம் ரூபாய் சம்பாதித்துப் பங்கிட்டுக்கொடுப்பதாக எழுதியிருக்கிறீர்கள். இது முற்றிலும் பொய்யானதும் அவதூறானதும் ஆகும்.

என்னை அவமானப் படுத்த வேண்டும் என்றும், என்னுடைய அரசியல் பொது வாழ்வு பாதிக்கப் படவேண்டும் என்றும் பொது மக்களிடத்தில் எனக்குள்ள செல்வாக்கு தாழ்த்தப்பட வேண்டும், என்றும்மன்றம் தமிழ்வாரஇதழ் விற்பனை பாதிக்கப்பட வேண்டும் என்றும் கெட்ட நோக்கத் தோடுதான் இந்த செய்தியை வெளியிட்டிருக்கிறீர்கள்.

இதனால் எனக்கும் என்னுடைய பொது வாழ்வுக்கும் அதிக அளவில் பாதிப்பு ஏற்பட்டிருக்கின்றவகையில் நான் நட்டமடைகிறேன்.

எனவே தாங்கள் பொய்யான செய்தியை வெளியிட்டதை மறுத்தும், மன்னிப்புக்கேட்டும்முரசொலி ஏட்டில் முதற்பக்கத்தில் இரண்டு கால அளவு தெளிவாக மறுப்பு வெளியிட வேண்டும்.

இந்தக் கடிதம் பெற்றுக்கொண்ட ஒருவார காலத்திற்குள் முரசொலியில் வெளியிட்டு அதன் நகலைப் பதிவுத் தபாலில் எனக்கும் அனுப்பி வைக்கவேண்டும். தவறினால் உங்கள் மீதும், முரசொலி ஆசிரியரும் அச்சிட்டு வெளியிடுபவர் மீதும் சட்டப்படி சிவில்- கிரிமினல் வழக்கு தொடரப்படும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறுமன்றம்பொறுப்பாசிரியர் ராம.வெள்ளையன் கூறியுள்ளார்.

### மாறனுக்கும்...

மறுப்பு அறிக்கை வெளியிடவேண்டும் என்று முரசொலி ஆசிரியர் மாறனுக்கும், ராம. வெள்ளையன் நோட்டீஸ் அனுப்பியிருக்கிறார்.

## ஜனதாக் கட்சி நிர்வாகக்குழு கூடுகிறது

புதுடெல்லி, ஆக. 23- ஜனதாக் கட்சியின் தேசிய நிர்வாகக் கமிட்டி விரைவில் கூடி தற்போதைய அரசியல் நிலவரத்தை விவாதிக்கும் என்று ஜனதாக் கட்சித்தலைவர் சந்திரசேகர் கூறியுள்ளார்.

ஒரு நாளில் ரூ 28 கிடுக்கிடு உயர்வு

## பவுன் விலை 868 ரூபாய்

சென்னை, ஆக, 23- பவுன் விலை நேற்று ரூ 868 ரூபாயாக உயர்ந்தது. இது வரை இல்லாத அளவு ஒரே நாளில் 28 ரூபாய் கூடியிருக்கிறது.

நேற்று முன் தினம் ஒரு பவுன் (8கிராம்) தங்கம் 838 ரூபாயாக விற்றது.

நேற்று காலையில் ஒரு பவுன் தங்கம் 840 ரூபாயாக கூடியது. மாலையில் ஒரேயடியாக 868 ரூபாய்க்கு உயர்ந்து விட்டது.

பம்பாய்தங்கம் மார்க்கெட் முடிவுவிலை நேற்று மாலை 5 மணிக்கு 1,110 ரூபாயாக இருந்தது. அதன் பிறகு உச்ச விலை 1125 ரூபாயாக இருந்தது.





## தமிழ்நாடு பரிசுச் சீட்டு

### 25-வது குலுக்கல் முடிவுகள் 21-8-1979

இராஜாஜி மண்டபம், சென்னை-600 002

| டி. ஆர். வரிசை | | டி. எஸ். வரிசை | | டி. டி. வரிசை | | டி.யூ. வரிசை | |
|---|---|---|---|---|---|---|---|
| 2 முதல் பரிசுகள் தலா ரூ. 50,000 | | | | | | | |
| 238941 | 608850 | 428416 | 678878 | 718503 | 899987 | 183312 | 997641 |
| 4 ஆறுதல் பரிசுகள் தலா ரூ. 1000 | | | | | | | |
| 238940 | 608849 | 428415 | 678877 | 718502 | 899986 | 183311 | 997640 |
| 238942 | 608851 | 428417 | 678879 | 718504 | 899988 | 183313 | 997642 |
| 3 இரண்டாவது பரிசுகள் தலா ரூ. 10,000 | | | | | | | |
| 263546 | 742131 | 443590 | 688835 | 710298 | 883578 | 798084 | 858505 |
| 541550 | | 494638 | | 843479 | | 803131 | |
| 6 ஆறுதல் பரிசுகள் தலா ரூ. 500 | | | | | | | |
| 263545 | 541551 | 443589 | 494639 | 710297 | 843480 | 798083 | 803132 |
| 263547 | 742130 | 443591 | 688834 | 710299 | 883577 | 798085 | 858504 |
| 541549 | 742132 | 494637 | 688836 | 843478 | 883579 | 803130 | 858506 |
| 5 மூன்றாவது பரிசுகள் தலா ரூ. 5,000 | | | | | | | |
| 085328 | 689979 | 081522 | 938020 | 011459 | 199968 | 164293 | 580415 |
| 169181 | 740396 | 567928 | 998812 | 080036 | 220389 | 237126 | 865603 |
| 548804 | | 845968 | | 121568 | | 313616 | |
| பத்து ஆறுதல் பரிசுகள் தலா ரூ. 300 | | | | | | | |
| 085327 | 548805 | 081521 | 845969 | 011458 | 121569 | 164292 | 313617 |
| 085329 | 689978 | 081523 | 938019 | 011460 | 199967 | 164294 | 580414 |
| 169180 | 689980 | 567927 | 938021 | 080035 | 199969 | 237125 | 580416 |
| 169182 | 740395 | 567929 | 998811 | 080037 | 220388 | 237127 | 865602 |
| 548803 | 740397 | 845967 | 998813 | 121567 | 220390 | 313615 | 865604 |
| 25 நான்காவது பரிசுகள் தலா ரூ. 1000 | | | | | | | |
| 008465 | 553207 | 043750 | 650319 | 074489 | 720569 | 011120 | 432969 |
| 026760 | 561926 | 077403 | 653019 | 136749 | 740316 | 035058 | 471247 |
| 072318 | 671677 | 090371 | 704816 | 151030 | 801645 | 073339 | 472306 |
| 123469 | 690417 | 096777 | 724778 | 197964 | 822306 | 074914 | 473426 |
| 201748 | 703437 | 172785 | 729705 | 256367 | 834064 | 140405 | 639838 |
| 242278 | 740948 | 328091 | 733769 | 259588 | 856938 | 159321 | 657947, |
| 268886 | 755598 | 347746 | 763642 | 268941 | 863910 | 170118 | 663828 |
| 290428 | 811319 | 492898 | 799890 | 427477 | 889369 | 172516 | 731707 |
| 358657 | 833920 | 493506 | 909525 | 448217 | 889973 | 194002 | 833336 |
| 440987 | 940556 | 547914 | 914996 | 543449 | 922835 | 239551 | 851532 |
| 444788 | 979651 | 568697 | 919617 | 586478 | 991388 | 309310 | 927503 |
| 453200 | | 568928 | 994886 | 678242 | 992826 | 328830 | 987367 |
| 462429 | 987830 | 574678 | | 717467 | | 339379 | |
| 100 ஐந்தாவது பரிசுகள் தலா ரூ. 500 பின் கண்ட ஐந்து எண்களுடன் முடியும் சீட்டுகளுக்கு | | | | | | | |
| 13791 | 53930 | 08419 | 55259 | 26521 | 77610 | 09435 | 73340 |
| 18912 | 55979 | 27007 | 61590 | 43138 | 78808 | 20507 | 75036 |
| 32692 | 66403 | 48778 | 63605 | 53039 | 81509 | 23649 | 78748 |
| 32821 | 68061 | 49350 | 73318 | 76048 | 83078 | 39139 | 97736 |
| 36322 | 82311 | 50151 | 91872 | 76222 | 87340 | 63510 | 99826 |
| 500 ஆறாவது பரிசுகள் தலா ரூ. 100 பின் கண்ட நான்கு எண்களுடன் முடியும் சீட்டுகளுக்கு | | | | | | | |
| 0827 | 3777 | 0529 | 5388 | 0116 | 6311 | 0329 | 4564 |
| 1648 | 4245 | 2367 | 6640 | 0777 | 9728 | 0519 | 8848 |
| 3308 | | 4527 | | 4736 | | 0836 | |
| 2 ஆயிரம் ஏழாவது பரிசுகள் தலா ரூ. 50 பின் கண்ட மூன்று எண்களுடன்முடியும் சீட்டுகளுக்கு | | | | | | | |
| 096 | 437 | 217 | 806 | 232 | 867 | 352 | 540 |

### பரிசுத்தொகை வழங்கும் இடங்கள்

| | |
|---|---|
| ரூபாய் 10 ஆயிரமும் அதற்கு மேற்பட்ட பரிசுத் தொகைகளும் | தமிழ்நாடு பரிசுச்சீட்டு இயக்குநர், அரசினர் தோட்டம், சென்னை - 600 002. |
| ரூபாய் பத்தாயிரத்திற்குக் குறைவான பரிசுத் தொகைகள் (மூன்றாவது முதல் ஏழாவது பரிசு வரை) | தமிழ்நாட்டிலுள்ள ஏதேனும் ஒரு கிளைக் கருவூலம். |

### குறிப்பு

செய்தித் தாள்களில் வெளியிடப்பட்டுள்ள குலுக்கல் முடிவுகளில் ஏற்படும் அச்சுப் பிழைகளுக்கு இவ்வலுவலகம் பொறுப்பல்ல. பரிசு பெற்றவர்கள் தமிழக அரசின் அதிகாரபூர்வமான அரசிதழில் பரிசு பெற்ற எண்களை சரிபார்த்துக் கொள்ளலாம். அரசிதழ் பெற்றுக் கொள்ள விரும்புவோர் அனுப்புகை கட்டுமான செலவு நீங்கலாக ரூபாய் 1.60 மட்டும் மணியார்டர் மூலம், விற்பனை அதிகாரி, அரசாங்க வெளியீட்டு அலுவலகம், 817, அண்ணாசாலை, சென்னை - 600 002 என்ற முகவரிக்கு அனுப்பி பெற்றுக்கொள்ளலாம். குலுக்கல் நடைபெற்ற நாளிலிருந்து பத்து நாட்கள் கழித்து அரசிதழ் கிடைக்கபெற்றவுடன் பரிசுத் தொகை கருவூலங்களில் வழங்கப்படும்.

**பரிசுத்தொகை பெறவேண்டிய கடைசி நாள்: 18-11-79**
**(குலுக்கல் நடைபெற்ற நாளிலிருந்து 90 நாட்களுக்குள்)**

எமது அடுத்த குலுக்கல்: 20-9-79
முதல் பரிசுகள்
ரூ. 50,000
மற்றும் அனேக பரிசுகள்
பரிசுச் சீட்டின் விலை ரூ. 1 மட்டும்
தமிழ்நாடு பரிசுச் சீட்டு இயக்குனர்
அரசினர் தோட்டம், சென்னை-600 002

கணிசமான வருமான வரிச் சலுகை பெற பரிசுத் தொகையை பொது மக்கள் வைப்பு நிதியில் முதலீடு செய்யுங்கள்.
விவரங்களுக்கு:
பாரதிய ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா/
தலைமை அஞ்சல் அலுவலகங்கள்/
சிறு சேமிப்பு இயக்குநர்
143, அண்ணா சாலை, சென்னை 600 002
தொலை பேசி: 812223

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275, அவ்வை சண்முகம் சாலை; சென்னை-600 614 என்ற முகவரியிலிருந்து கே ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன் 'நவசக்தி' அச்சகம் சென்னை-600 014.
ஆசிரியர்: எம்.ஜி. சக்ரபாணி